assigned to them. That will be the first priority. Then the landless poor and who have got a minimum of land and so on, will be the order of priority.

SRI V. K. KOTHANDARAMAN : செல்வாக்குப் படைத்த சிலர் பதினைந்து எக்கர் நிலத்துக்கு மேல் சொந்தக்காரர்களாக இருக்கக்கூடிய வர்கள் அனுபவித்து வரும் தரிசு நிலங்களை ஏழை விவசாயிகளுக்கு ஒப்படைக்க முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : எனக்கு இன்னும் விவரம் கிடைக்கவில்லை என்று சொன்னேன். விவரம் கிடைத்த பிறகு எல்லா விஷயங்களும் தெரியும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : புறம்போக்கு தரிசு நிலங்களை ஒப்படைக்கப்படுவதாக இருந்தால் அதிக காலதாமதம் ஏற்படுகிறது. அதை தவிர்க்க தக்க நடவடிக்கை எடுப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் முன் வருவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : ஏற்கனவே இது சம்பந்த மாக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இன்னும் காலதாமத மானால் அதுவும் கவனிக்கப்படும்.

SRI M. P. SUBRAMANIAM : எவ்வளவு எக்கர் நிலம் அட மானம் செய்யப்பட்டன என்ற புள்ளி விவரங்கள் கொடுக்கப்படவில்லை. ஆனால் எல்லா நிலங்களையும் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கைகளை எடுக்க யோசித்துக் கொண்டிருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வி மாகாணம் பூராவையும் பொறுத்தது. அதற்குபதில் சொல்வதாக இருந்தால் புள்ளி விவரங்கள் சேகரிக்கவேண்டும். அதற்கு காலதாமதம் ஆகும். அங்கங்கே போய் விசாரிக்க வேண்டியதாக இருக்கிறது.

MR. SPEAKER : Does the hon. Member expect the Hon. Minister for Revenue to make a policy statement during the question-hour? During the Budget discussion, there will be ample opportunities for him to do so.

SRI K. VINAYAKAM : Not the entire policy but a gist of it.

MR. SPEAKER : It would not be fair to ask the Hon. Minister to make a policy statement now.

*Cultivable poramboke lands*

* 85 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have passed any orders for the distribution of cultivable poramboke lands in Voimodu village, Tiruthuraipundi taluk at the rate of two acres for each landless agricultural labourer of that area; and

(*b*) if so, the action taken so far in pursuance of these orders?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

13th February 1958]

(b) Assignment of the land has been proposed to be taken up after the survey operations have been completed. The Board's further report in the matter is awaited.

Sri A. VEDARATHNAM : இப்போது அவர்களுக்கு நிலம் பிரித்துக்கொடுப்பதற்கு உத்திரவிடப்பட்டிருக்கிறதா ? அப்படியில்லே யென்றால் சர்வே செய்வது எப்பொழுது முடியும். இந்த நிலங்கள் நீண்டகாலமாக சர்வே செய்யாமல் பெண்டிங்காக இருக்கின்றன. இப்பொழுது இருக்கும் உணவு நெருக்கடியின் காரணமாக துரிதமாக எடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : சுமார் 1,400 ஏக்கர் நிலம் இப்பொழுது சர்வே செய்யப்பட்டன. இன்னும் 1,200 ஏக்கர் நிலம் சர்வே செய்யப்படவேண்டும். இது இன்னும் சர்வே செய்யப்படாததற்குக் காரணம் அந்த நிலத்தில் தண்ணீர் தேங்கி இருப்பதால் சர்வே செய்வது கஷ்டமாக இருக்கிறது. இந்த நிலங்களை துரிதமாக வழங்கு வதற்கு எல்லாவித முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருகிறது.

*Refractory bricks factory*

* 86 Q.—Sri M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether any decision has been taken with regard to the starting of an industry to manufacture refractory bricks out of the magnesite deposit at Salem; and

(b) if so, whether it is under private sector or public sector?

The Hon. Sri R. VENKATARAMAN : (a) & (b) A joint stock company has been granted a licence to start a magnesite refractory bricks factory in Salem district. A grant of a licence has been recommended for the establishment of a similar factory by another concern.

Sri M. P. SUBRAMANIAM : கனம் தலைவர் அவர்களே, இந்த தொழிற்சாலையை நடத்துவதற்கு அரசாங்கம் ஏன் முன்வரவில்லை. வேறு தனிப்பட்ட கம்பெனியின் ஒத்துழைப்பைக்கோரி, அக்கோரிக்கை அந்தக் கம்பெனியால் ஒப்புக்கொள்ளப்படவில்லையென்றால் நாட்டின் நலனை உத் தேசித்து ஏன் அரசாங்கம் வற்புறுத்தல் கூடாது அல்லது தானே எடுத்து நடத்தக்கூடாது ?

The Hon. Sri R. VENKATARAMAN : Industrial and Development Regulation Act பிரகாரம் ஒரு ரிப்ராக்டரி செங்கல் தொழிற்சாலையை ஆரம்பிக்க அனுமதிகொடுக்கப்பட்டது. சர்க்காரும் பர்ன் அண்டு கம்பனியும் சேர்ந்து அந்த தொழிற்சாலை நடத்துவதற்கு அந்த பர்ன் அண்டு கம்பெனி ஒத்துக்கொள்ளவில்லை. ஆகவே அந்த யோசனை கைவிடப்பட்டது.

Sri A. A. RASHEED : When will this factory be put into commission?

The Hon. Sri R. VENKATARAMAN : A licence has been granted to a private individual and it is not possible for the Government to say when the private individual will put up the factory.

Sri K. SATTANATHA KARAYALAR : சென்னை சர்க்காரை கலந்தாலோசித்து ஒரு முடிவிற்கு வந்ததா அல்லது கலந்தாலோசிக் காமலேயே ஒரு முடிவிற்கு வரப்பட்டதா ?

The Hon. Sri R. VENKATARAMAN : சென்னை சர்க்கார் ஒரு கார்பொரேஷன் அமைக்கவேண்டுமென்று கருதி அதற்கு உதவியாக இன்னொரு கம்பெனியையும் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று இருந்தது. ஆனால் அந்த கம்பனி அதற்கு ஒத்துவராததால் அந்த முடிவிற்கு வரவில்லை.